49779

12 T I,II

# අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
# கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
# General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)

ශෛවනෙරි I, II
சைவநெறி I, II
Saivanery I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## சைவநெறி I

**அறிவுறுத்தல்கள் :**

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
* **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (X) இடுக.**
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

**1.** "ஐந்துகரத் தானைமுகப் பெருமானே" எனும் பாடலடியில் போற்றப்படுபவர்
(1) சிவபெருமான் (2) திருமால் (3) விநாயகர் (4) முருகன்

**2.** இந்து சமயத்தின் சிறப்பு நூலாகக் கொள்ளப்படுவது
(1) வேதம் (2) ஆகமம் (3) திருமுறை (4) கந்தபுராணம்

**3.** இசைக்கு முக்கியத்துவம் அளிக்கும் வேதம்
(1) இருக்கு (2) யசுர் (3) சாமம் (4) அதர்வணம்

**4.** சிதம்பரம் திருத்தலத்தின் வரலாற்றைக் கூறும் நூல்
(1) சேக்கிழார் புராணம் (2) கந்தபுராணம்
(3) பெரியபுராணம் (4) கோயிற்புராணம்

**5.** தட்சிணகைலாச புராணம் சிறப்பிக்கும் ஈழத்துத் திருத்தலம்
(1) திருக்கோணேஸ்வரம் (2) திருக்கேதீஸ்வரம்
(3) முன்னேஸ்வரம் (4) நகுலேஸ்வரம்

**6.** இலங்கையை 'சிவபூமி' எனச் சிறப்பித்துக் கூறியவர்
(1) அருணகிரிநாதர் (2) ஆறுமுகநாவலர் (3) பூசலார் (4) திருமூலர்

**7.** "வெள்ளை நிறப்பூவும் அல்ல வேறெந்த மலரும் அல்ல உள்ளக் கமலமடி உத்தமனார் வேண்டுவது..." எனப் பாடியவர்
(1) ஆறுமுகநாவலர் (2) சுவாமி விபுலாநந்தர்
(3) திருமூலர் (4) அருணகிரிநாதர்

**8.** இறைவனின் ஐந்தொழில்களில் 'அநுக்கிரகம்' என்பது
(1) படைத்தல் (2) காத்தல் (3) அருளல் (4) மறைத்தல்

**9.** சிவனடியார்களின் மகிமை குறித்து சுந்தரமூர்த்தி நாயனார் பாடியது
(1) திருத்தொண்டத் தொகை (2) திருத்தொண்டர் புராணம்
(3) திருத்தொண்டர் திருவந்தாதி (4) திருமுறைகண்ட புராணம்

[பக். 2 ஐப் பார்க்க

**10.** அறுபத்து நான்கு சக்தி பீடங்களுள் ஒன்றாக அமையும் தலம்
(1) பாண்டிருப்பு திரௌபதையம்மன் ஆலயம்
(2) மாத்தளை ஸ்ரீ முத்துமாரியம்மன் ஆலயம்
(3) நயினை நாகபூசணியம்மன் ஆலயம்
(4) வற்றாப்பளை கண்ணகியம்மன் ஆலயம்

**11.** முத்திக்கு அடிப்படையாக அமையும் ஆகமத்தின் பகுதி
(1) சரியாபாதம் (2) கிரியாபாதம் (3) யோகாபாதம் (4) ஞானபாதம்

**12.** பஞ்சாங்க முறைப்படி சந்திரன் ஒவ்வொரு நட்சத்திரத்தையும் கடப்பதற்கு எடுக்கும் காலப்பகுதி
(1) வாரம் (2) கரணம் (3) யோகம் (4) திதி

**13.** ஒல்லாந்தர் காலத்தில் எழுந்த சைவசமய இலக்கியம்
(1) பறாளை விநாயகர் பள்ளு (2) தட்சிணகைலாச புராணம்
(3) கோணேசர் கல்வெட்டு (4) கதிரைமலைப் பள்ளு

**14.** அகத்தே அணியும் சிவசின்னமாக விளங்குவது
(1) விபூதி (2) உருத்திராக்கம் (3) காவியுடை (4) பஞ்சாட்சரம்

**15.** குரு, சீடனுக்கு இடையில் வினா-விடை அமைப்பில் அமைந்த சைவ சித்தாந்த சாத்திர நூல்
(1) இருபா இருபஃது (2) சிவஞானபோதம்
(3) திருவருட்பயன் (4) சிவஞானசித்தியார்

**16.** தமது இறந்த தாயை நினைத்து இந்துக்கள் அனுஷ்டிக்கும் விரதம்
(1) ஆடி அமாவாசை (2) சித்திரா பௌர்ணமி
(3) திருவாதிரை (4) பிரதோஷம்

**17.** ஒன்பதாம் திருமுறையில் உள்ளடங்கும் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு ஆகிய இரண்டையும் பாடியவர்
(1) சேதிராயர் (2) திருமாளிகைத்தேவர்
(3) திருமூலர் (4) சேந்தனார்

**18.** அருணகிரிநாதரால் போற்றிப் பாடப்பட்ட ஈழத்து முருகன் ஆலயங்கள்
(1) செல்வச்சந்நிதி, வெருகல் சித்திர வேலாயுதர் ஆலயம்
(2) வெருகல் சித்திர வேலாயுதர் ஆலயம், கந்தவனக் கடவை
(3) கந்தவனக்கடவை, கதிர்காமம்
(4) கதிர்காமம், மண்டூர் முருகன் ஆலயம்

**19.** 'ஊர் கூடித் தேர் இழுத்தல்' என்பதனூடாக வெளிப்படுத்தப்படும் விழுமியப்பண்பு
(1) ஒற்றுமை (2) கலையார்வம் (3) விருந்தோம்பல் (4) ஒப்புரவு

**20.** குருபக்தியினால் உயர்பதம் எய்திய அடியார்
(1) சாக்கிய நாயனார் (2) பூசலார் (3) மங்கையற்கரசியார் (4) இயற்பகையார்

**21.** ஆடி அமாவாசையன்று பிதிர்க்கடன் நிறைவேற்றுவதை சிறப்பு நிகழ்வாகக் கொண்ட தலம்
(1) மாமாங்கப் பிள்ளையார் ஆலயம் (2) கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரம்
(3) இணுவில் கந்தசுவாமி கோயில் (4) பொன்னாலை வரதராஜப் பெருமாள் கோயில்

**22.** ஆலயத் திருவிழா உற்சவத்தின் ஆரம்பத்தில் வைக்கோல், தருப்பை முதலியவற்றால் செய்யப்பட்ட உருவமொன்றை சிவாக்கினியோடு சேர்த்து வீதிவழியே இழுத்து, வீதியை சுத்தம் செய்யும் பாவனையில் நிகழ்த்தப்படுவது
(1) கிராம சாந்தி (2) அங்குரார்ப்பணம் (3) சூர்ணோற்சவம் (4) வாஸ்து சாந்தி

**23.** 'பிரத்தியட்சம்' என்பது,
(1) ஞானியர் கூறிய உண்மை வாக்கியங்களாகும்.
(2) ஒன்றைக் கொண்டு மற்றொன்றை ஊகித்தறிவதாகும்.
(3) பொறிகள் வாயிலாகப் பெற்றுக்கொள்ளும் அறிவாகும்.
(4) நூல்கள் மூலம் பெற்றுக்கொள்ளும் ஞானமாகும்.

[பக். 3 ஐப் பார்க்க

**24.** இந்துக்களைப் பொறுத்தவரையில் ஒரு நாளின் எல்லை என்பது,
(1) சூரிய உதயம் முதல் அடுத்த நாள் சூரிய உதயம் வரையான காலப்பகுதியாகும்.
(2) நண்பகல் முதல் அடுத்த நாள் நண்பகல் வரையான காலப்பகுதியாகும்.
(3) சூரிய அஸ்தமனம் முதல் அடுத்த நாள் சூரிய அஸ்தமனம் வரையான காலப்பகுதியாகும்.
(4) நள்ளிரவு முதல் அடுத்த நாள் நள்ளிரவு வரையான காலப்பகுதியாகும்.

**25.** புறச்சந்தான குரவர்களை மாத்திரம் கொண்ட தொகுதி யாது?
(1) மெய்கண்டதேவர், அருணந்தி சிவாச்சாரியார், மறைஞான சம்பந்தர்
(2) சனற்குமார முனிவர், சத்தியஞானதரிசினிகள், உமாபதி சிவாச்சாரியார்
(3) திருநந்திதேவர், சனற்குமார முனிவர், பரஞ்சோதி முனிவர்
(4) அருணந்தி சிவாச்சாரியார், சனற்குமார முனிவர், மறைஞான சம்பந்தர்

**26.** சைவசமய முன்னோர்களால் 'ஆவுரோஞ்சுகல்' அமைக்கப்பட்டதன் நோக்கம்
(1) வழிப்போக்கர்கள் இளைப்பாறிச் செல்லலாகும்.
(2) விலங்குகள் தமது உடலிலுள்ள உண்ணி முதலியவற்றை அகற்றுதலாகும்.
(3) விலங்குகளின் தாக சாந்தியாகும்.
(4) இறந்த வீரர்களை நினைவுகூர்ந்து வழிபடுதலாகும்.

**27.** ஆணவம் 'சகசமலம்' என அழைக்கப்படுவதற்கான காரணம் யாது?
(1) இருளை விட ஆணவம் கொடியது என்பதனாலாகும்.
(2) இருளைப் போன்று மறைக்கும் இயல்பு கொண்டதனாலாகும்.
(3) ஆன்மாவுடன் கூடவே பிறந்ததனாலாகும்.
(4) மூவகை ஆன்மாக்களிலும் பீடித்திருப்பதனாலாகும்.

**28.** "யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே" எனும் திருமந்திரப் பாடல் வரி உணர்த்தும் விழுமியப் பண்பு
(1) தினமும் இறை வழிபாட்டில் ஈடுபட வேண்டும்.
(2) உயிரினங்களிடத்தில் கருணை காட்ட வேண்டும்.
(3) பசித்திருப்போரின் பசியைப் போக்க வேண்டும்.
(4) பிறரிடம் இனிய வார்த்தைகளைப் பேச வேண்டும்.

**29.** மகோற்சவத்தில் இடம்பெறும் திருக்கல்யாணம் உணர்த்துவது,
(1) ஆணவம் வலியிழந்து, ஆன்மா மலநீக்கம் பெறுதற் பொருட்டு திருவருள் உதவுகின்றமையையாகும்.
(2) அருள் வடிவான சக்தி, அறிவு மயமான சிவத்தோடு கலந்து பிரபஞ்சத்தை இயங்க வைப்பதையாகும்.
(3) உலகின் தானிய விருத்தி தடையின்றி நடைபெற இறைவன் அருள் வழங்குகின்றமையையாகும்.
(4) இறைவன் ஒருவனே எனும் தத்துவத்தை அனைத்து ஜீவராசிகளும் அறிந்து கொள்ள வேண்டும் என்பதனையாகும்.

**30.** கண்ணகியை மானிடப் பெண்ணாக அன்றி, பராசக்தியின் அம்சமாகக் கொள்ளும் ஈழத்து இலக்கியங்களை மாத்திரம் உள்ளடக்கிய தொகுதி யாது?
(1) கண்ணகி வழக்குரை, சிலப்பதிகாரம், கோவலனார் கதை
(2) கண்ணகி வழக்குரை, சிலப்பதிகாரம், சிலம்பு கூறல்
(3) சிலப்பதிகாரம், கோவலனார் கதை, சிலம்பு கூறல்
(4) கண்ணகி வழக்குரை, கோவலனார் கதை, சிலம்பு கூறல்

**31.** 'தீட்சை' என்பதன் பொருள்
(1) மலத்தைக் கொடுத்து ஞானத்தைக் கெடுப்பது
(2) மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பது
(3) மலத்தையும் ஞானத்தையும் கொடுப்பது
(4) மலத்தையும் ஞானத்தையும் கெடுப்பது

**32.** 'சீவன்முத்தி' என்பது,
(1) ஆன்மா உடலோடு கூடியிருக்கும்போது கிடைப்பதாகும்.
(2) ஆன்மா உடலை விட்டுப்பிரிந்த பின்பு கிடைப்பதாகும்.
(3) ஆன்மா உலகியல் இன்பத்தில் ஈடுபடுவதாகும்.
(4) ஆன்மா அசத்தை சார்ந்திருக்கும் நிலையாகும்.

[பக். 4 ஐப் பார்க்க